## மன்னரைச்சேர்ந்தொழுகல்

அகலா தணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார். க

மன்னர் விழைப விழையாமை மன்னரான்
மன்னிய வாக்கந் தரும். உ

போற்றி னரியவை போற்றல் கடுத்தபின்
றேற்றுதல் யார்க்கு மரிது. ௩

செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு மவித்தொழுக
லான்ற பெரியா ரகத்து. ௪

எப்பொருளு மோரார் தொடரார்மற் றப்பொருளை
விட்டக்காற் கேட்க மறை. ௫

குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல். ௬

வேட்பன சொல்லி வினையில வெஞ்ஞான்றுங்
கேட்பினுஞ் சொல்லா விடல். எ

இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற
வொளியோ டொழுகப் படும். அ

கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத செய்யார்
துளக்கற்ற காட்சி யவர். ௯

பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யுங்
கெழுதகைமை கேடு தரும். ௰

# குறிப்பறிதல்

கூறாமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்று
மாறாநீர் வையக் கணி. ௧

ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல். ௨

குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல். ௩

குறித்தது கூறாமைக் கொள்வாரோ டேனை
யுறுப்போ ரனையரால் வேறு. ௪

குறிப்பிற் குறிப்புணரா வாயி னுறுப்பினு
ளென்ன பயத்தவோ கண். ௫

அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்
கடுத்தது காட்டு முகம். ௬

முகத்தின் முதுக்குறைந்த துண்டோ வுவப்பினுங்
காயினுந் தான்முந் துறும். ௭

முகநோக்கி நிற்க வமையு மகநோக்கி
யுற்ற துணர்வார்ப் பெறின். ௮

பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின்
வகைமை யுணர்வார்ப் பெறின். ௯

நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்காற்
கண்ணல்ல தில்லை பிற.

# அவையறிதல்

அவையறிந் தாராய்ந்து சொல்லுக சொல்லின்
றொகையறிந்த தூய்மை யவர். க

இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லி
னடைதெரிந்த நன்மை யவர். உ

அவையறியார் சொல்லன்மேற் கொள்பவர் சொல்லின்
வகையறியார் வல்லதூஉ மில். ந

ஒளியார்முன் னொள்ளிய ராதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணங் கொளல். ச

நன்றென்ற வற்றுள்ளு நன்றே முதுவருண்
முந்து கிளவாச் செறிவு. ரு

ஆற்றி னிலைதளர்ந் தற்றே வியன்புல
மேற்றுணர்வார் முன்ன ரிழுக்கு. சு

கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து. எ

உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன்
பாத்தியு ணீர்சொரிந் தற்று. அ

புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க நல்லவையு
ணன்கு செலச்சொல்லு வார். கூ

அங்கணத்து ளுக்க வமிழ்தற்றாற் றங்கணத்த
ரல்லார்முற் கோட்டி கொளல். ய

# அவையஞ்சாமை

வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
றொகையறிந்த தூய்மை யவர். க

கற்றாருட் கற்றா ரெனப்படுவர் கற்றார்முற்
கற்ற செலச்சொல்லு வார். உ

பகையகத்துச் சாவா ரெளிய ரரிய
ரவையகத் தஞ்சா தவர். ௩

கற்றார்முற் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற
மிக்காருண் மிக்க கொளல். ௪

ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு. ௫

வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடெ
னுண்ணவை யஞ்சு பவர்க்கு. ௬

பகையகத்துப் பேடிகை யொள்வா ளவையகத்
தஞ்சு மவன்கற்ற நூல். எ

பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையு
ணன்கு செலச்சொல்லா தார். அ

கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்து
நல்லா ரவையஞ்சு வார். கூ

உளரெனினு மில்லாரொ டொப்பர் களனஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார். ௰

# நாடு

தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு. ௧

பெரும்பொருளாற் பெட்டக்க தாகி யருங்கேட்டா
லாற்ற விளைவது நாடு. ௨

பொறையொருங்கு மேல்வருங்காற் றாங்கி யிறையவற்
கிறையொருங்கு நேர்வது நாடு. ௩

உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு. ௪

பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்குங்
கொல்குறும்பு மில்லது நாடு. ௫

கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டிற் றலை. ௬

இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணு நாட்டிற் குறுப்பு. ௭

பிணியின்மை செல்வம் விளைவின்ப மேம
மணியென்ப நாட்டிற்கிவ் வைந்து. ௮

நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு. ௯

ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு. ௰

# அரண்

ஆற்று பவர்க்கு மரண்பொரு ளஞ்சித்தற்
போற்று பவர்க்கும் பொருள். ௧

மணிநீரு மண்ணு மலையு மணிநிழற்
காடு முடைய தரண். ௨

உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கி
னமைவர ணென்றுரைக்கு நூல். ௩

சிறுகாப்பிற் பேரிடத்த தாகி யுறுபகை
யூக்க மழிப்ப தரண். ௪

கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி யகத்தார்
நிலைக்கெளிதா நீர தரண். ௫

எல்லாப் பொருளு முடைத்தா யிடத்துதவு
நல்லா ளுடைய தரண். ௬

முற்றியு முற்றா தெறிந்து மறைப்படுத்தும்
பற்றற் கரிய தரண். ௭

முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்
பற்றியார் வெல்வ தரண். ௮

முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து
வீறெய்தி மாண்ட தரண். ௯

எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
யில்லார்க ணில்ல தரண். ௰

# பொருள்செயல்வகை

பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள். க

இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு. உ

பொருளென்னும் பொய்யா விளக்க மிருளறுக்கு
மெண்ணிய தேயத்துச் சென்று. ந

அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள். ச

அருளொடு மன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல். ரு

உறுபொருளு முல்கு பொருளுந்தன் னொன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள். சு

அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ்
செல்வச் செவிலியா லுண்டு. எ

குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை. அ

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கு
மெஃகதனிற் கூரிய தில். கூ

ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொரு
ளேனை யிரண்டு மொருங்கு. ய

## படைமாட்சி

உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையு ளெல்லாந் தலை. ௧

உலைவிடத் தூறஞ்சா வன்கண் டொலைவிடத்துத்
தொல்படைக் கல்லா லரிது. ௨

ஒலித்தக்கா லென்னா முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும். ௩

அழிவின் றறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை. ௪

கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கு
மாற்ற லதுவே படை. ௫

மறமான மாண்ட வழிச்செலவு தேற்ற
மெனநான்கே யேமம் படைக்கு. ௬

தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்குந் தன்மை யறிந்து. ௭

அடற்றகையு மாற்றலு மில்லெனினுந் தானை
படைத்தகையாற் பாடு பெறும். ௮

சிறுமையுஞ் செல்லாத் துனியும் வறுமையு
மில்லாயின் வெல்லும் படை. ௯

நிலைமக்கள் சால வுடைத்தெனினுந் தானை
தலைமக்க ளில்வழி யில். ௰

# படைச்செருக்கு

என்னைமுன் னில்லன்மின் றெவ்விர் பலரென்னை
முன்னின்று கன்னின் றவர். க

தான முயலெய்த வம்பினில் யானை
பிழைத்தவே லேந்த லினிது. உ

பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கா
லூராண்மை மற்றத னெஃகு. ங

கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும். ச

விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பி
னொட்டன்றோ வன்க ணவர்க்கு. ரு

விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் னாளை யெடுத்து. சு

சுழலு மிசைவேண்டி வேண்டா வுயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து. எ

உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன்
செறினுஞ்சீர் குன்ற லிலர். அ

இழைத்த திகவாமைச் சாவாரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவர். கூ

புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா
டிரந்துகோட் டக்க துடைத்து. ய

# நட்பு.

செயற்கரிய யாவுள நட்பி னதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு. ௧

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு. ௨

நவிறொறு நூனயம் போலும் பயிறொறும்
பண்புடை யாளர் தொடர்பு. ௩

நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு. ௪

புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதா
னட்பாங் கிழமை தரும். ௫

முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு. ௬

அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்க
ணல்ல லுழப்பதா நட்பு. ௭

உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதா நட்பு. ௮

நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி
யொல்லும்வா யூன்று நிலை. ௯

இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று
புனையினும் புல்லென்னு நட்பு. ௰

# நட்பாராய்தல்

நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு. ௧

ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும். ௨

குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா
வினனு மறிந்தியாக்க நட்பு. ௩

குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு. ௪

அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல். ௫

கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை
நீட்டி யளப்பதோர் கோல். ௬

ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல். ௭

உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க
வல்லற்க ணாற்றறுப்பார் நட்பு. ௮

கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை யடுங்காலை
யுள்ளினு முள்ளஞ் சுடும். ௯

மருவுக மாசற்றார் கேண்மையொன் றீத்து
மொருவுக வொப்பிலார் நட்பு. ௰

## பழைமை

பழைமை யெனப்படுவ தியாதெனின் யாதுங்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு. ௧

நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்
குப்பாதல் சான்றோர் கடன். ௨

பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை
செய்தாங் கமையாக் கடை. ௩

விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையாற்
கேளாது நட்டார் செயின். ௪

பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க
நோதக்க நட்டார் செயின். ௫

எல்லைக்க ணின்றார் துறவார் தொலைவிடத்துந்
தொல்லைக்க ணின்றார் தொடர்பு. ௬

அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின்
வழிவந்த கேண்மை யவர். ௭

கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுக்க நட்டார் செயின். ௮

கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையு முலகு. ௯

விழையார் விழையப் படுப பழையார்கட்
பண்பிற் றலைப்பிரியா தார். ௰

# தீ நட்பு

பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்ற லினிது. ௧

உறினட் டறினொரூஉ மொப்பிலார் கேண்மை
பெறினு மிழப்பினு மென். ௨

உறுவது சீர்தூக்கு நட்பும் பெறுவது
கொள்வாருங் கள்வரு நேர். ௩

அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா வன்னார்
தமரிற் றனிமை தலை. ௪

செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை
யெய்தலி னெய்தாமை நன்று. ௫

பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையா
ரேதின்மை கோடி யுறும். ௬

நகைவகைய ராகிய நட்பிற் பகைவராற்
பத்தடுத்த கோடி யுறும். ௭

ஒல்லுங் கரும முடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல். ௮

கனவினு மின்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு. ௯

எனைத்துங் குறுகுத லோம்பன் மனைக்கெழீஇ
மன்றிற் பழிப்பார் தொடர்பு. ௰

## கூடாநட்பு

சீரிடங் காணி னெறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு. க

இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும். உ

பலநல்ல கற்றக் கடைத்து மனநல்ல
ராகுதன் மாணார்க் கரிது. ங

முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா
வஞ்சரை யஞ்சப் படும். ச

மனத்தி னமையா தவரை யெனைத்தொன்றுஞ்
சொல்லினாற் றேறற்பாற் றன்று. ரு

நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்சொ
லொல்லை யுணரப் படும். சு

சொல்வணக்க மொன்னார்கட் கொள்ளற்க வில்வணக்கந்
தீங்கு குறித்தமை யான். எ

தொழுதகை யுள்ளும் படையொடுங்கு மொன்னா
ரழுதகண் ணீரு மனைத்து. அ

மிகச்செய்து தம்மெள்ளு வாரை நகச்செய்து
நட்பினுட் சாப்புல்லற் பாற்று. கூ

பகைநட்பாங் காலம் வருங்கான் முகநட்
டகநட் பொரீஇ விடல். ய

# பேதைமை

பேதைமை யென்பதொன் றியாதெனி னேதங்கொண்
டூதியம் போக விடல். ௧

பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கட் செயல். ௨

நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில். ௩

ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில். ௪

ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையுந்
தான்புக் கழுந்து மளறு. ௫

பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின். ௬

ஏதிலா ராரத் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வ முற்றக் கடை. ௭

மைய லொருவன் களித்தற்றாற் பேதைதன்
கையொன் றுடைமை பெறின். ௮

பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
பீழை தருவதொன் றில். ௯

கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல். ௰

# புல்லறிவாண்மை

அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை
யின்மையா வையா துலகு. க

அறிவிலா னெஞ்சுவந் தீதல் பிறிதியாது
மில்லை பெறுவான் றவம். உ

அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்குஞ் செய்த லரிது. ங

வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை
யுடையம்யா மென்னுஞ் செருக்கு. ச

கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற
வல்லதூஉ மையந் தரும். ரு

அற்ற மறைத்தலோ புல்லறிவு தம்வயிற்
குற்ற மறையா வழி. சு

அருமறை சோரு மறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு. எ

ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய். அ

காணாதாற் காட்டுவான் றான்காணான் காணாதான்
கண்டானாந் தான்கண்ட வாறு. கூ

உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும். ய

# இகல்

இகலென்ப வெல்லா வுயிர்க்கும் பகலென்னும்
பண்பின்மை பாரிக்கு நோய். க

பகல்கருதிப் பற்றா செயினு மிகல்கருதி
யின்னாசெய் யாமை தலை. உ

இகலென்னு மெவ்வநோய் நீக்கிற் றவலில்லாத்
தாவில் விளக்கந் தரும். ங

இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின். ச

இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்குந் தன்மை யவர். ரு

இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலு நணித்து. சு

மிகன்மேவல் மெய்ப்பொருள் காணா ரிகன்மேவ
லின்னா வறிவி னவர். எ

இகலிற் கெதிர்சாய்த லாக்க மதனை
மிகலூக்கி னூக்குமாங் கேடு. அ

இகல்காணா னாக்கம் வருங்கா லதனை
மிகல்காணுங் கேடு தரற்கு. கூ

இகலானா மின்னாத வெல்லா நகலானா
நன்னய மென்னுஞ் செருக்கு. ய

## பகைமாட்சி

வலியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா
மெலியார்மேன் மேக பகை. க

அன்பிலன் ஆன்ற துணையிலன் றான்றுவ்வா
னென்பரியு மேதிலான் றுப்பு. உ

அஞ்சு மறியா னமைவில னீகலான்
றஞ்ச மெளியன் பகைக்கு. ௩

நீங்கான் வெகுளி நிறையில னெஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கு மெளிது. ௪

வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க் கினிது. ரு

காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணாமை பேணப் படும். சு

கொடுத்துங் கொளல்வேண்டு மன்ற வடுத்திருந்து
மாணாத செய்வான் பகை. எ

குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்
கினனிலனா மேமாப் புடைத்து. அ

செறுவார்க்குச் சேணிகவா வின்ப மறிவிலா
வஞ்சும் பகைவர்ப் பெறின். கூ

கல்லான் வெகுளுஞ் சிறுபொரு ளெஞ்ஞான்று
மொல்லானை யொல்லா தொளி. ௰

# பகைத்திறந்தெரிதல்

பகையென்னும் பண்பி லதனை யொருவ
னகையேயும் வேண்டற்பாற் றன்று. ௧

வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை. ௨

ஏமுற் றவரினு மேழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன். ௩

பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
றகைமைக்கட் டங்கிற் றுலகு. ௪

தன்றுணை யின்றாற் பகையிரண்டாற் றானொருவ
னின்றுணையாக் கொள்கவற்றி னொன்று. ௫

தேறினுந் தேறா விடினு மழிவின்கட்
டேறான் பகாஅன் விடல். ௬

நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து. ௭

வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கட் பட்ட செருக்கு. ௮

இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து. ௯

உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார். ௰

## உட்பகை

நிழனீரு மின்னாத வின்னா தமர்நீரு
மின்னாவா மின்னா செயின். க

வாள்போல் பகைவரை யஞ்சற்க வஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு. உ

உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும். ங

மனமாணா வுட்பகை தோன்றி னினமாணா
வேதம் பலவுந் தரும். ச

உறன்முறையா னுட்பகை தோன்றி னிறன்முறையா
னேதம் பலவுந் தரும். ரு

ஒன்றாமை யொன்றியார் கட்படி னெஞ்ஞான்றும்
பொன்றாமை யொன்ற லரிது. சு

செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங் கூடாதே
யுட்பகை யுற்ற குடி. எ

அரம்பொருத பொன்போலத் தேயு முரம்பொரு
துட்பகை யுற்ற குடி. அ

எட்பக வன்ன சிறுமைத்தே யாயினு
முட்பகை யுள்ளதாங் கேடு. கூ

உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட்
பாம்போ டுடனுறைந் தற்று. ய

# பெரியாரைப்பிழையாமை

ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார்
போற்றலு ளெல்லாந் தலை. ௧

பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாராற்
பேரா விடும்பை தரும். ௨

கெடல்வேண்டிற் கேளாது செய்க வடல்வேண்டி
னாற்று பவர்க ணிழுக்கு. ௩

கூற்றத்தைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க்
காற்றா தா ரின்னா செயல். ௪

யாண்டுச்சென் றியாண்டு முளராகார் வெந்துப்பின்
வேந்து செறப்பட் டவர். ௫

எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார். ௬

வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு மென்னாந்
தகைமாண்ட தக்கார் செறின். ௭

குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து. ௮

ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும். ௯

இறந்தமைந்த சார்புடைய ராயினு முய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின். ௰

# பெண்வழிச்சேறல்

மனைவிழைவார் மாண்பய னெய்தார் வினைவிழைவார்
வேண்டாப் பொருளு மது. க

பேணுது பெண்விழைவா னாக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும். உ

இல்லாள்கட் டாழ்ந்த வியல்பின்மை யெஞ்ஞான்று
நல்லாரு ணாணுத் தரும். ந

மனையாளை யஞ்சு மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்த லின்று. ச

இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்று
நல்லார்க்கு நல்ல செயல். ரு

இமையாரின் வாழினும் பாடிலரே யில்லா
ளமையார்தோ ளஞ்சு பவர். சு

பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னாணுடைப்
பெண்ணே பெருமை யுடைத்து. எ

நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்
பெட்டாங் கொழுகு பவர். அ

அறவினையு மான்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்க ணில். கூ

எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை யில். ய

# வரைவின்மகளிர்

அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியா
ரின்சொ லிழுக்குத் தரும். க

பயன்றூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
நயன்றூக்கி நள்ளா விடல். உ

பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையி
லேதில் பிணந்தழீஇ யற்று. ந

பொருட்பொருளார் புன்னலந் தோயா ரருட்பொரு
ளாயு மறிவி னவர். ச

பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்
மாண்ட வறிவி னவர். ரு

தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள். சு

நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்பவர் தோள். எ

ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு. அ

வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்க ளாழு மளறு. கூ

இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு. ω

# கள்ளுண்ணாமை

உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங்
கட்காதல் கொண்டொழுகு வார். ௧

உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரா
னெண்ணப் படவேண்டா தார். ௨

ஈன்றாண் முகத்தேயு மின்னாதா லென்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி. ௩

நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும்
பேணாப் பெருங்குற்றத் தார்க்கு. ௪

கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறி யாமை கொளல். ௫

துஞ்சினார் செத்தாரின் வேறல்ல ரெஞ்ஞான்று
நஞ்சுண்பார் கள்ளுண் பவர். ௬

உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவ ரெஞ்ஞான்றுங்
கள்ளொற்றிக் கண்சாய் பவர். ௭

களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத்
தொளித்ததூஉ மாங்கே மிகும். ௮

களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று. ௯

கள்ளுண்ணாப் போழ்திற் களித்தானைக் காணுங்கா
லுள்ளான்கொ லுண்டதன் சோர்வு. ௰

# சூது

வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று. க

ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்கொ
னன்றெய்தி வாழ்வதோ ராறு. ௨

உருளாய மோவாது கூறிற் பொருளாயம்
போஒய்ப் புறமே படும். ௩

சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில். ௪

கவறுங் கழகமுங் கையுந் தருக்கி
யிவறியா ரில்லாகி யார். ௫

அகடாரா ரல்ல லுழப்பர்சூ தென்னு
முகடியான் மூடப்பட் டார். ௬

பழகிய செல்வமும் பண்புங் கெடுக்குங்
கழகத்துக் காலை புகின். ௭

பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ யருள்கெடுத்
தல்ல லுழப்பிக்குஞ் சூது. ௮

உடைசெல்வ மூணொளி கல்வியென் றைந்து
மடையாவா மாயங் கொளின். ௯

இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்ப
முழத்தொறூஉங் காதற் றுயிர். ௰

# மருந்து

மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர்
வளிமுதலா வெண்ணிய மூன்று. ௧

மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின். ௨

அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு. ௩

அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து. ௪

மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணி
னூறுபா டில்லை யுயிர்க்கு. ௫

இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்குங்
கழிபே ரிரையான்க ணோய். ௬

தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணி
னோயள வின்றிப் படும். ௭

நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல். ௮

உற்றா னளவும் பிணியளவுங் காலமுங்
கற்றான் கருதிச் செயல். ௯

உற்றவன் றீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்
றப்பானாற் கூற்றே மருந்து. ௰

# குடிமை

இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச்
செப்பமு நாணு மொருங்கு. ௧

ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூன்று
மிழுக்கார் குடிப்பிறந் தார். ௨

நகையீகை யின்சொ லிகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு. ௩

அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்த லிலர். ௪

வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரித லின்று. ௫

சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற
குலம்பற்றி வாழ்துமென் பார். ௬

குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து. ௭

நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக்
குலத்தின்க ணையப் படும். ௮

நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல். ௯

நலம்வேண்டி னாணுடைமை வேண்டுக் குலம்வேண்டின்
வேண்டுக யார்க்கும் பணிவு. ௰

## மானம்

இன்றி யமையாச் சிறப்பின வாயினுங்
குன்ற வருப விடல். ௧

சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர். ௨

பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டு முயர்வு. ௩

தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை. ௪

குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின். ௫

புகழின்றாற் புத்தேணாட் டுய்யாதா லென்மற்
றிகழ்வார்பின் சென்று நிலை. ௬

ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்நிலையே
கெட்டா னெனப்படுத லன்று. ௭

மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து. ௮

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா
ருயிர்நீப்பர் மானம் வரின். ௯

இளிவரின் வாழாத மான முடையா
ரொளிதொழு தேத்து முலகு. ௰

# பெருமை

ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொருவற்
கஃதிறந்து வாழ்து மெனல். ௧

பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான். ௨

மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர். ௩

ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு. ௪

பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி
னருமை யுடைய செயல். ௫

சிறியா ருணர்ச்சியு ளில்லை பெரியாரைப்
பேணிக்கொள் வேமென்னு நோக்கு. ௬

இறப்பே புரிந்த தொழிற்றாஞ் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின். ௭

பணியுமா மென்றும் பெருமை சிறுமை
யணியுமாந் தன்னை வியந்து. ௮

பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடல். ௯

அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும். ௰

## சான்றாண்மை

கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு. ௧

குணநலஞ் சான்றோர் நலனே பிறநலம்
மெந்நலத் துள்ளதூஉ மன்று. ௨

அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ
டைந்துசால் பூன்றிய தூண். ௩

கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு. ௪

ஆற்றுவா ராற்றல் பணித லதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை. ௫

சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
துலையல்லார் கண்ணுங் கொளல். ௬

இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு. ௭

இன்மை யொருவற் கிளிவன்று சால்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின். ௮

ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி யெனப்படு வார். ௯

சான்றவர் சான்றாண்மை குன்றி னிருநிலந்தான்
றாங்காது மன்னோ பொறை. ௰

# பண்புடைமை

எண்பதத்தா லெய்த லெளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு. ௧

அன்புடைமை யான்ற குடிப்பிறத்த லிவ்விரண்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு. ௨

உறுப்பொத்தல் மக்களொப் பன்றால் வெறுத்தக்க
பண்பொத்த லொப்பதா மொப்பு. ௩

நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு. ௪

நகையுள்ளு மின்னா திகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு. ௫

பண்புடையார்ப் பட்டுண் டுலக மதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன். ௬

அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர். ௭

நண்பாற்றா ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்றா ராதல் கடை. ௮

நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள். ௯

பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வ நன்பால்
கலந்தீமை யாற்றிரிந் தற்று. ௰

# நன்றியில்செல்வம்

வைத்தான்வாய் சான்ற பெரும்பொரு ளஃதுண்ணான்
செத்தான் செயக்கிடந்த தில். ௧

பொருளானா மெல்லாமென் றீயா திவறு
மருளானா மாணாப் பிறப்பு. ௨

ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்
தோற்ற நிலக்குப் பொறை. ௩

எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ வொருவரா
னச்சப் படாஅ தவன். ௪

கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய
கோடியுண் டாயினு மில். ௫

ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் றக்கார்க்கொன்
றீத லியல்பிலா தான். ௬

அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம்
பெற்றா டமியண்மூத் தற்று. ௭

நச்சப் படாதவன் செல்வ நடுவூரு
ணச்சு மரம்பழுத் தற்று. ௮

அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
வொண்பொருள் கொள்வார் பிறர். ௯

சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து. ௰

# நாணுடைமை

கருமத்தா னாணுத னாணுத் திருநுத
னல்லவர் நாணுப் பிற. ௧

ஊணுடை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு. ௨

ஊனைக் குறித்த வுயிரெல்லா நாணென்னு
நன்மை குறித்தது சால்பு. ௩

அணியன்றோ நாணுடைமை சான்றோர்க் கஃதின்றேற்
பிணியன்றோ பீடு நடை. ௪

பிறர்பழியுந் தம்பழியு நாணுவார் நாணுக்
குறைபதி யென்னு முலகு. ௫

நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர். ௬

நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டா
னாண்டுறவார் நாணாள் பவர். ௭

பிறர்நாணத் தக்கது தானாணா னாயி
னறநாணத் தக்க துடைத்து. ௮

குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடு
நாணின்மை நின்றக் கடை. ௯

நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை
நாணா லுயிர்மருட்டி யற்று. ௰

# குடிசெயல்வகை

கருமஞ் செயவொருவன் கைதூவே னென்னும்
பெருமையிற் பீடுடைய தில். ௧

ஆள்வினையு மான்ற வறிவு மெனவிரண்டி
னீள்வினையா னீளுங் குடி. ௨

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும். ௩

சூழாமற் றானே முடிவெய்துந் தங்குடியைத்
தாழா துஞற்று பவர்க்கு. ௪

குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்று முலகு. ௫

நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
வில்லாண்மை யாக்கிக் கொளல். ௬

அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்து
மாற்றுவார் மேற்றே பொறை. ௭

குடிசெய்வார்க் கில்லை பருவ மடிசெய்து
மானங் கருதக் கெடும். ௮

இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்
குற்ற மறைப்பா னுடம்பு. ௯

இடுக்கண்கால் கொன்றிட வீழு மடுத்தூன்று
நல்லா ளிலாத குடி. ௰

# உழவு

சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனா
லுழந்து முழவே தலை. ௧

உழுவா ருலகத்தார்க் காணியஃ தாற்றா
தெழுவாரை யெல்லாம் பொறுத்து. ௨

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர். ௩

பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்ப
ரலகுடை நீழ லவர். ௪

இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய் தூண் மாலை யவர். ௫

உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை. ௬

தொடிப்புழுதி கஃசா வுணக்கிற் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும். ௭

ஏரினு நன்றா லெருவிடுதல் கட்டபி
னீரினு நன்றதன் காப்பு. ௮

செல்லான் கிழவ னிருப்பி னிலம்புலந்
தில்லாளி னூடி விடும். ௯

இலமென் றசைஇ யிருப்பாரைக் காணி
னிலமென்னு நல்லா ணகும். ௰

## நல்குரவு

இன்மையி னின்னாத தியாதெனி னின்மையி
னின்மையே யின்னா தது. ௧

இன்மை யெனவொரு பாவி மறுமையு
மிம்மையு மின்றி வரும். ௨

தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக
நல்குர வென்னு நசை. ௩

இற்பிறந்தார் கண்ணேயு மின்மை யிளிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும். ௪

நல்குர வென்னு மிடும்பையுட் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும். ௫

நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும். ௬

அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும். ௭

இன்றும் வருவது கொல்லோ நெருநலுங்
கொன்றது போலு நிரப்பு. ௮

நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பா டரிது. ௯

துப்புர வில்லார் துவரத் துறவாமை
யுப்பிற்குங் காடிக்குங் கூற்று. ௰

# இரவு

இரக்க விரத்தக்கார்க் காணிற் கரப்பி
னவர்பழி தம்பழி யன்று. ௧

இன்ப மொருவற் கிரத்த லிரந்தவை
துன்ப முறாஅ வரின். ௨

கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின்
றிரப்புமோ ரேஎ ருடைத்து. ௩

இரத்தலு மீதலே போலுங் கரத்தல்
கனவிலுந் தேற்றாதார் மாட்டு.

கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்
றிரப்பவர் மேற்கொள் வது. ௫

கரப்பிடும்பை யில்லாரைக் காணி னிரப்பிடும்பை
யெல்லா மொருங்கு கெடும். ௬

இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ள
முள்ளு ளுவப்ப துடைத்து. ௭

இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞால
மரப்பாவை சென்றுவந் தற்று. ௮

ஈவார்க ணென்னுண்டாந் தோற்ற மிரந்துகோண்
மேவா ரிலாஅக் கடை. ௯

இரப்பான் வெகுளாமை வேண்டு நிரப்பிடும்பை
தானேயுஞ் சாலுங் கரி. ௰

# இரவச்சம்

கரவா துவந்தீயுங் கண்ணன்னார் கண்ணு
மிரவாமை கோடி யுறும். ௧

இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான். ௨

இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்ட தில். ௩

இடமெல்லாங் கொள்ளாத் தகைத்தே யிடமில்லாக்
காலு மிரவொல்லாச் சால்பு. ௪

தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த
துண்ணலி னூங்கினிய தில். ௫

ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்
கிரவி னிளிவந்த தில். ௬

இரப்ப னிரப்பாரை யெல்லா மிரப்பிற்
கரப்பா ரிரவன்மி னென்று. ௭

இரவென்னு மேமாப்பி றோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும். ௮

இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள
வுள்ளதூஉ மின்றிக் கெடும். ௯

கரப்பவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ விரப்பவர்
சொல்லாடப் போஒ முயிர். ௰

## கயமை

மக்களே போல்வர் கயவ ரவரன்ன
வொப்பாரி யாங்கண்ட தில். ௧

நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர். ௨

தேவ ரனையர் கயவ ரவருந்தா
மேவன செய்தொழுக லான். ௩

அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ். ௪

அச்சமே கீழ்கள தாசார மெச்ச
மவாவுண்டே லுண்டாஞ் சிறிது. ௫

அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான். ௬

ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு. ௭

சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ். ௮

உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல்
வடுக்காண வற்றாகுங் கீழ். ௯

எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து. ௰

## தகையணங்குறுத்தல்

அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் னெஞ்சு. ௧

நோக்கினா ணோக்கெதிர் நோக்குத றாக்கணங்கு
தானைக்கொண் டன்ன துடைத்து. ௨

பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்
பெண்டகையாற் பேரமர்க் கட்டு. ௩

கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தார் பெண்டகைப்
பேதைக் கமர்த்தன கண். ௪

கூற்றமோ கண்ணோ பிணையோ மடவர
ணோக்கமிம் மூன்று முடைத்து. ௫

கொடும்புருவங் கோடா மறைப்பி னடுங்கஞர்
செய்யல மன்னிவள் கண். ௬

கடாஅக் களிற்றின்மேற் கட்படா மாதர்
படாஅ முலைமேற் றுகில். ௭

ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினு
ணண்ணாரு முட்குமென் பீடு. ௮

பிணையேர் மடநோக்கு நாணு முடையாட்
கணியெவனோ வேதில தந்து. ௯

உண்டார்க ணல்ல தடுநறாக் காமம்போற்
கண்டார் மகிழ்செய்த லின்று. ௰

# குறிப்பறிதல்

இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து. ௧

கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்திற்
செம்பாக மன்று பெரிது. ௨

நோக்கினா ணோக்கி யிறைஞ்சினா ளஃதவள்
யாப்பினு ளட்டிய நீர். ௩

யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற்
றானோக்கி மெல்ல நகும். ௪

குறிக்கொண்டு நோக்காமை யல்லா லொருகண்
சிறக்கணித்தாள் போல நகும். ௫

உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொ
லொல்லை யுணரப் படும். ௬

செறாஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போ னோக்கு
முறாஅர்போன் றுற்றார் குறிப்பு. ௭

அசையியற் குண்டாண்டோ ரேஎர்யா னோக்கப்
பசையினள் பைய நகும். ௮

ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே யுள. ௯

கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கி னவாய்ச்சொற்க
ளென்ன பயனு மில. ௰

# புணர்ச்சிமகிழ்தல்

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு
மொண்டொடி கண்ணே யுள. க

பிணிக்கு மருந்து பிறம னணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து. உ

தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொ
றாமரைக் கண்ணா னுலகு. ங

நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந்
தீயாண்டுப் பெற்றா ளிவள். ச

வேட்ட பொழுதி னவையவை போலுமே
தோட்டார் கதுப்பினா டோள். ரு

உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்
கமிழ்தி னியன்றன தோள். சு

தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றா
லம்மா வரிவை முயக்கு. எ

வீழு மிருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு. அ

ஊட லுணர்தல் புணர்த லிவைகாமங்
கூடியார் பெற்ற பயன். கூ

அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு. ய

# நலம்புனைந்துரைத்தல்

நன்னீரை வாழி யனிச்சமே நின்னினு
மென்னீரள் யாம்வீழ் பவள். ௧

மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று. ௨

முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு. ௩

காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கு
மாணிழை கண்ணொவ்வே மென்று. ௪

அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தா ணுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை. ௫

மதியு மடந்தை முகனு மறியா
பதியிற் கலங்கிய மீன். ௬

அறுவாய் நிறைந்த வவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து. ௭

மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்
காதலை வாழி மதி. ௮

மலரன்ன கண்ணாண் முகமொத்தி யாயிற்
பலர்காணத் தோன்றன் மதி. ௯

அனிச்சமு மன்னத்தின் றூவியு மாத
ரடிக்கு நெருஞ்சிப் பழம். ௰

# காதற்சிறப்புரைத்தல்

பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர். க

உடம்பொ டுயிரிடை யென்னமற் றன்ன
மடந்தையொ டெம்மிடை நட்பு. உ

கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழுந்
திருநுதற் கில்லை யிடம். ங

வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாத
லதற்கன்ன ணீங்கு மிடத்து. ச

உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியே
னொள்ளமர்க் கண்ணாள் குணம். ரு

கண்ணுள்ளிற் போகா ரிமைப்பிற் பருவரார்
நுண்ணியரெங் காத லவர். சு

கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணு
மெழுதேங் கரப்பாக் கறிந்து. எ

நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்ட
லஞ்சுதும் வேபாக் கறிந்து. அ

இமைப்பிற் கரப்பாக் கறிவ லனைத்திற்கே
யேதில ரென்னுமிவ் வூர். கூ

உவந்துறைவ ருள்ளத்து ளென்று மிகந்துறைவ
ரேதில ரென்னுமிவ் வூர். ய

# நாணுத்துறவுரைத்தல்

காம முழந்து வருந்தினார்க் கேம
மடலல்ல தில்லை வலி. ௧

நோனா வுடம்பு முயிரு மடலேறு
நாணினை நீக்கி நிறுத்து. ௨

நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடையேன்
காமுற்றா ரேறு மடல். ௩

காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
நல்லாண்மை யென்னும் புணை. ௪

தொடலைக் குறுந்தொடி தந்தாண் மடலொடு
மாலை யுழக்குந் துயர். ௫

மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் மன்ற
படலொல்லா பேதைக்கென் கண். ௬

கடலன்ன காம முழந்து மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில். ௭

நிறையரியர் மன்னளிய ரென்னாது காம
மறையிறந்து மன்று படும். ௮

அறிகிலா ரெல்லாரு மென்றேயென் காம
மறுகின் மறுகு மருண்டு. ௯

யாங்கண்ணிற் காண நகுப வறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு. ௰

# அலரறிவுறுத்தல்

அலரெழ வாருயிர் நிற்கு மதனைப்
பலரறியார் பாக்கியத் தால். க

மலரன்ன கண்ணா ளருமை யறியா
தலரெமக் கீந்ததிவ் வூர். உ

உறாஅதோ வூரறிந்த கௌவை யதனைப்
பெறாஅது பெற்றன்ன நீர்த்து. ங

கவ்வையாற் கவ்விது காம மதுவின்றேற்
றவவென்னுந் தன்மை யிழந்து. ச

களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்
வெளிப்படுந் தோறு மினிது. ரு

கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று. சா

ஊரவர் கௌவை யெருவாக வன்னைசொன்
னீராக நீளுமிந் நோய். எ

நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றாற் கௌவையாற்
காம நுதுப்பே மெனல். அ

அலர்நாண வொல்வதோ வஞ்சலோம் பென்றார்
பலர்நாண நீத்தக் கடை. கூ

தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டுங்
கௌவை யெடுக்குமிவ் வூர் ம

# பிரிவாற்றாமை

செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை. க

இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்க ணுடைத்தாற் புணர்வு. உ

அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான். ஙூ

அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற்
றேறியார்க் குண்டோ தவறு. சு

ஓம்பி னமைந்தார் பிரிவோம்பன் மற்றவர்
நீங்கி னரிதாற் புணர்வு. ரு

பிரிவுரைக்கும் வன்கண்ண ராயி னரிதவர்
நல்குவ ரென்னு நசை. சு

துறைவன் றுறந்தமை தூற்றாகொ ன் முன்கை
யிறையிறவா நின்ற வளை. எ

இன்னா தினனில்லூர் வாழ்த லதனினு
மின்னா தினியார்ப் பிரிவு. அ

தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ. கூ

அரிதாற்றி யல்லனோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்னிருந்து வாழ்வார் பலர். ய

## படர்மெலிந்திரங்கல்

மறைப்பேன்மன் யானிஃதோ நோயை யிறைப்பவர்க்
கூற்றுநீர் போல மிகும். ௧

கரத்தலு மாற்றேனிந் நோயைநோய் செய்தார்க்
குரைத்தலு நாணுத் தரும். ௨

காமமு நாணு முயிர்காவாத் தூங்குமென்
னோனா வுடம்பி னகத்து. ௩

காமக் கடன்மன்னு முண்டே யதுநீந்து
மேமப் புணைமன்னு மில். ௪

துப்பி னெவனாவர் மற்கொ றுயர்வரவு
நட்பினு ளாற்று பவர். ௫

இன்பங் கடன்மற்றுக் காம மஃதடுங்காற்
றுன்ப மதனிற் பெரிது. ௬

காமக் கடும்புன னீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே யுளேன். ௭

மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா
வென்னல்ல தில்லை துணை. ௮

கொடியார் கொடுமையிற் றாங்கொடிய விந்நா
ணெடிய கழியு மிரா. ௯

உள்ளம்போன் றுள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்
நீந்தல மன்னோவென் கண். ௰

# கண்விதுப்பழிதல்

கண்டாங் கலுழ்வதெவன் கொலோ தண்டாநோய்
தாங்காட்ட யாங்கண் டது. ௧

தெரிந்துணரா நோக்கிய வுண்கண் பரிந்துணராப்
பைத லுழப்ப தெவன். ௨

கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழு
மிதுநகத் தக்க துடைத்து. ௩

பெயலாற்றா நீருலந்த வுண்க ணுயலாற்றா
வுய்வினோ யென்க ணிறுத்து. ௪

படலாற்றா பைத லுழக்குங் கடலாற்றாக்
காமநோய் செய்தவென் கண். ௫

ஓஒ வினிதே யெமக்கிந்நோய் செய்தகண்
டாஅ மிதற்பட் டது. ௬

உழந்துழந் துண்ணீ ரறுக விழைந்திழைந்து
வேண்டி யவர்க்கண்ட கண். ௭

பேணாது பெட்டா ருளர்மன்னோ மற்றவர்க்
காணா தமைவில கண். ௮

வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை
யாரஞ ருற்றன கண். ௯

மறைபெற லூரார்க் கரிதன்றா லெம்போல
லறைபறை கண்ணா ரகத்து. ௰

# பசப்புறுபருவரல்

நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தவென்
பண்பியார்க் குரைக்கோ பிற. க

அவர்தந்தா ரென்னுந் தகையா லிவர்தந்தென்
மேனிமே லூரும் பசப்பு. உ

சாயலு நாணு மவர்கொண்டார் கைம்மாறா
நோயும் பசலையுந் தந்து. ங

உள்ளுவன் மன்யா னுரைப்ப தவர்திறமாற்
கள்ளம் பிறவோ பசப்பு. ச

உவக்காணெங் காதலர் செல்வா ரிவக்காணென்
மேனி பசப்பூர் வது. ரு

விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு. சு

புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தே னவ்வளவி
லள்ளிக்கொள் வற்றே பசப்பு. எ

பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத்
துறந்தா ரவரென்பா ரில். அ

பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்
நன்னிலைய ராவ ரெனின். கூ

பசப்பெனப் பேர்பெறுத னன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்றா ரெனின். ௰

# தனிப்படர்மிகுதி

தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழில் கனி. க

வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வா ரளிக்கு மளி. உ

வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே
வாழுந மென்னுஞ் செருக்கு. ங

வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅ ரெனின். ச

நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாங்காதல் கொள்ளாக் கடை. ரு

ஒருதலையா னின்னாது காமங்காப் போல
விருதலை யானு மினிது. சா

பருவரலும் பைதலுங் காணான்கொல் காம
னொருவர்க ணின்றொழுகு வான். எ

வீழ்வாரி னின்சொற் பெறாஅ துலகத்து
வாழ்வாரின் வன்கணா ரில். அ

நசைஇயார் நல்கா ரெனினு மவர்மாட்
டிசையு மினிய செவிக்கு. கூ

உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறாஅஅய் வாழிய நெஞ்சு. ௰

# நினைந்தவர்புலம்பல்

உள்ளினுந் தீராப் பெருமகிழ் செய்தலாற்
கள்ளினுங் காம மினிது. க

எனைத்தொன் றினிதேகாண் காமந்தாம் வீழ்வார்
நினைப்ப வருவதொன் றில். உ

நினைப்பவர் போன்று நினையார்கொ றும்மல்
சினைப்பது போன்று கெடும். ங

யாமு முளேங்கொ லவர்நெஞ்சத் தெந்நெஞ்சத்
தோஒ வுளரே யவர். ச

தந்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணார்கொ
லெந்நெஞ்சத் தோவா வரல். ரு

மற்றியா னென்னுளேன் மன்னோ வவரொடியா
னுற்றநா ளுள்ள வுளேன். சு

மறப்பி னெவனாவன் மற்கொன் மறப்பறியேன்
உள்ளினு முள்ளஞ் சுடும். எ

எனைத்து நினைப்பினுங் காயா ரனைத்தன்றோ
காதலர் செய்யுஞ் சிறப்பு. அ

விளியுமெ னின்னுயிர் வேறல்ல மென்பா
ரளியின்மை யாற்ற நினைந்து. கூ

விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப்
படாஅதி வாழி மதி. ய

## கனவுநிலையுரைத்தல்

காதலர் தூதொடு வந்த கனவினுக்
கியாதுசெய் வேன்கொல் விருந்து. ௧

கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க்
குயலுண்மை சாற்றுவேன் மன். ௨

நனவினா னல்கா தவரைக் கனவினாற்
காண்டலி னுண்டென் னுயிர். ௩

கனவினா னுண்டாகுங் காம நனவினா
னல்காரை நாடித் தரற்கு. ௪

நனவினாற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே யினிது. ௫

நனவென வொன்றில்லை யாயிற் கனவினாற்
காதலர் நீங்கலர் மன். ௬

நனவினா னல்காக் கொடியார் கனவினா
னென்னெம்மைப் பீழிப் பது. ௭

துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கா
னெஞ்சத்த ராவர் விரைந்து. ௮

நனவினா னல்காரை நோவர் கனவினாற்
காதலர்க் காணா தவர். ௯

நனவினா னந்நீத்தா ரென்பர் கனவினாற்
காணார்கொ லிவ்வூ ரவர். ௰

# பொழுதுகண்டிரங்கல்

மாலையோ வல்லை மணந்தா ருயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது. ௧

புன்கண்ணை வாழி மருண்மாலை யெங்கேள்போல்
வன்கண்ண தோநின் றுணை. ௨

பனியரும்பிப் பைதல்கொண் மாலை துனியரும்பித்
துன்பம் வளர வரும். ௩

காதல ரில்வழி மாலை கொலைக்களத்
தேதிலர் போல வரும். ௪

காலைக்குச் செய்தநன் றென்கொ லெவன்கொலியான்
மாலைக்குச் செய்த பகை. ௫

மாலைநோய் செய்தன் மணந்தா ரகலாத
காலை யறிந்த திலேன். ௬

காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய். ௭

அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன்
குழல்போலுங் கொல்லும் படை. ௮

பதிமருண்டு பைத லுழக்கு மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து. ௯

பொருண்மாலை யாளரை யுள்ளி மருண்மாலை
மாயுமென் மாயா வுயிர். ௰

# உறுப்புநலனழிதல்

சிறுமை நமக்கொழியச் சேட்சென்றா ருள்ளி
நறுமலர் நாணின கண். க

நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாருங் கண். உ

தணந்தமை சால வறிவிப்ப போலு
மணந்தநாள் வீங்கிய தோள். ங

பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள். ச

கொடியார் கொடுமை யுரைக்குந் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள். ரு

தொடியொடு தோணெகிழ நோவ லவரைக்
கொடிய ரெனக்கூற னொந்து. சா

பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்
வாடுதோட் பூச லுரைத்து. எ

முயங்கிய கைகளை யூக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல். அ

முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற
பேதை பெருமழைக் கண். கூ

கண்ணின் பசப்போ பருவர லெய்தின்றே
யொண்ணுதல் செய்தது கண்டு. ௰

# நெஞ்சொடுகிளத்தல்

நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே யெனைத்தொன்று
மெவ்வநோய் தீர்க்கு மருந்து. க

காத லவரில ராகநீ நோவது
பேதைமை வாழியென் னெஞ்சு. உ

இருந்துள்ளி யென்பரித னெஞ்சே பரிந்துள்ளல்
பைதனோய் செய்தார் கணில். ங

கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையென்னைத்
தின்னு மவர்க்காண லுற்று. ச

செற்றா ரெனக்கை விடலுண்டோ நெஞ்சேயா
முற்றா லுறாஅ தவர். ரு

கலந்துணர்த்துங் காதலர்க் கண்டாற் புலந்துணராய்
பொய்க்காய்வு காய்தியென் னெஞ்சு. சு

காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே
யானோ பொறேனிவ் விரண்டு. எ

பரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதையென் னெஞ்சு. அ

உள்ளத்தார் காத லவராக வுள்ளிநீ
யாருழைச் சேறியென் னெஞ்சு. கூ

துன்னாத் துறந்தாரை நெஞ்சத் துடையேமா
வின்னு மிழத்துங் கவின். ய

# நிறையழிதல்

காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னு
நாணுத்தாழ் வீழ்த்த கதவு. ௧

காம மெனவொன்றோ கண்ணின்றென் னெஞ்சத்தை
யாமத்து மாளுந் தொழில். ௨

மறைப்பேன்மற் காமத்தை யானோ குறிப்பின்றித்
தும்மல்போற் றோன்றி விடும். ௩

நிறையுடையே னென்பேன்மன் யானோவென் காம
மறையிறந்து மன்று படும். ௪

செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோ
யுற்றா ரறிவதொன் றன்று. ௫

செற்றவர் பின்சேறல் வேண்டி யளித்தரோ
வெற்றென்னை யுற்ற துயர். ௬

நாணென வொன்றோ வறியலங் காமத்தாற்
பேணியார் பெட்ப செயின். ௭

பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை. ௮

புலப்ப லெனச்சென்றேன் புல்லினே னெஞ்சங்
கலத்த லுறுவது கண்டு. ௯

நிணந்தீயி லிட்டன்ன நெஞ்சினார்க் குண்டோ
புணர்ந்தூடி நிற்பே மெனல். ௰

## அவர்வயின் விதும்பல்

வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல். ௧

இலங்கிழா யின்று மறப்பினென் றோண்மேற்
கலங்கழியுங் காரிகை நீத்து. ௨

உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்
வரனசைஇ யின்னு முளேன். ௩

கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்
கோடுகொ டேறுமென் னெஞ்சு. ௪

காண்கமற் கொண்கனைக் கண்ணாரக் கண்டபி
னீங்குமென் மென்றோட் பசப்பு. ௫

வருகமற் கொண்க னொருநாட் பருகுவன்
பைதனோ யெல்லாங் கெட. ௬

புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல்
கண்ணன்ன கேளிர் வரின். ௭

வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
மாலை யயர்கம் விருந்து. ௮

ஒருநா ளெழுநாள்போற் செல்லுஞ்சேட் சென்றார்
வருநாள்வைத் தேங்கு பவர்க்கு. ௯

பெறினென்னாம் பெற்றக்கா லென்னா முறினென்னா
முள்ள முடைந்துக்கக் கால். ௰

# குறிப்பறிவுறுத்தல்

கரப்பினுங் கையிகந் தொல்லாநின் னுண்க
ணுரைக்க லுறுவதொன் றுண்டு. ௧

கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப
பெண்ணிறைந்த நீர்மை பெரிது. ௨

மணியிற் றிகழ்தரு நூல்போல் மடந்தை
யணியிற் றிகழ்வதொன் றுண்டு. ௩

முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை
நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு. ௪

செறிதொடி செய்திறந்த கள்ள முறுதுயர்
தீர்க்கு மருந்தொன் றுடைத்து. ௫

பெரிதாற்றிப் பெட்பக் கலத்த லரிதாற்றி
யன்பின்மை சூழ்வ துடைத்து. ௬

தண்ணந் துறைவன் றணந்தமை நம்மினு
முன்ன முணர்ந்த வளை. ௭

நெருநற்றுச் சென்றாரெங் காதலர் யாமு
மெழுநாளே மேனி பசந்து. ௮

தொடிநோக்கி மென்றோளு நோக்கி யடிநோக்கி
யஃதாண் டவள்செய் தது. ௯

பெண்ணினாற் பெண்மை யுடைத்தென்ப கண்ணினாற்
காமநோய் சொல்லி யிரவு. ௰

## புணர்ச்சிவிதும்பல்

உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு. ௧

தினைத்துணையு மூடாமை வேண்டும் பனைத்துணையுங்
காம நிறைய வரின். ௨

பேணாது பெட்பவே செய்யினுங் கொண்கனைக்
காணா தமையல கண். ௩

ஊடற்கட் சென்றேன்மற் றோழி யதுமறந்து
கூடற்கட் சென்றதென் னெஞ்சு. ௪

எழுதுங்காற் கோல்காணாக் கண்ணேபோற் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து. ௫

காணுங்காற் காணேன் றவறாய காணாக்காற்
காணேன் றவறல் லவை. ௬

உய்த்த லறிந்து புனல்பாய் பவரேபோற்
பொய்த்த லறிந்தென் புலந்து. ௭

இளித்தக்க வின்னா செயினுங் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு. ௮

மலரினு மெல்லிது காமஞ் சிலரதன்
செவ்வி தலைப்படு வார். ௯

கண்ணிற் றுனித்தே கலங்கினாள் புல்லுத
லெண்ணினுந் தான்விதுப் புற்று. ௰

# நெஞ்சொடுபுலத்தல்

அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே
நீயெமக் காகா தது. ௧

உறாஅ தவர்க்கண்ட கண்ணு மவரைச்
செறாஅரெனச் சேறியென் னெஞ்சு. ௨

கெட்டார்க்கு நட்டாரில் லென்பதோ நெஞ்சேநீ
பெட்டாங் கவர்பின் செலல். ௩

இனியன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று. ௪

பெறாஅமை யஞ்சும் பெறிற்பிரி வஞ்சு
மறாஅ விடும்பைத்தென் னெஞ்சு. ௫

தனியே யிருந்து நினைத்தக்கா லென்னைத்
தினிய விருந்ததென் னெஞ்சு. ௬

நாணு மறந்தே னவர்மறக் கல்லாவென்
மாணா மடநெஞ்சிற் பட்டு. ௭

எள்ளி னிளிவாமென் றெண்ணி யவர்திற
முள்ளு முயிர்க்காத னெஞ்சு. ௮

துன்பத்திற் கியாரே துணையாவார் தாமுடைய
நெஞ்சந் துணையல் வழி. ௯

தஞ்சந் தமரல்ல ரேதிலார் தாமுடைய
நெஞ்சந் தமரல் வழி. ௰

## புலவி

புல்லா திராஅப் புலத்தை யவருறு
மல்லனோய் காண்கஞ் சிறிது. க

உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
மிக்கற்றா னீள விடல். உ

அலந்தாரை யல்லனோய் செய்தற்றாற் றம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல். ங

ஊடி யவரை யுணராமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று. ச

நலத்தகை நல்லவர்க் கேஎர் புலத்தகை
பூவன்ன கண்ணா ரகத்து. ரு

துனியும் புலவியு மில்லாயிற் காமங்
கனியுங் கருக்காயு மற்று. சு

ஊடலி னுண்டாங்கோர் துன்பம் புணர்வது
நீடுவ தன்றுகொ லென்று. எ

நோத லெவன்மற்று நொந்தாரென் றஃதறியுங்
காதல ரில்லா வழி. அ

நீரு நிழல தினிதே புலவியும்
வீழுநர் கண்ணே யினிது. கூ

ஊட லுணங்க விடுவாரோ டென்னெஞ்சங்
கூடுவே மென்ப தவா. ௰

# புலவி நுணுக்கம்

பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர்
நண்ணேன் பரத்தநின் மார்பு. ௧

ஊடி யிருந்தேமாத் தும்மினார் யாந்தம்மை
நீடுவாழ் கென்பாக் கறிந்து. ௨

கோட்டுப்பூச் சூடினுங் காயு மொருத்தியைக்
காட்டிய சூடினீ ரென்று. ௩

யாரினுங் காதல மென்றேனா வூடினாள்
யாரினும் யாரினு மென்று. ௪

இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள். ௫

உள்ளினே னென்றேன்மற் றென்மறந்தீ ரென்றென்னைப்
புல்லாள் புலத்தக் கனள். ௬

வழுத்தினா டும்மினே னாக வழித்தழுதா
ளாருள்ளித் தும்மினீ ரென்று. ௭

தும்முச் செறுப்ப வழுதா ணுமருள்ளா
லெம்மை மறைத்திரோ வென்று. ௮

தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீ
ரிந்நீர ராகுதி ரென்று. ௯

நினைத்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீ ரென்று. ௰

## ஊடலுவகை

இல்லை தவறவர்க் காயினு மூடுதல்
வல்ல தவரளிக்கு மாறு. க

ஊடலிற் றோன்றுஞ் சிறுதுனி நல்லளி
வாடினும் பாடு பெறும். உ

புலத்தலிற் புத்தேணா டுண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்னா ரகத்து. ௩

புல்லி விடாஅப் புலவியுட் டோன்றுமென்
னுள்ள முடைக்கும் படை. ௪

தவறில ராயினுந் தாம்வீழ்வார் மென்றோ
ளகறலி னாங்கொன் றுடைத்து. ௫

உணலினு முண்ட தறலினிது காமம்
புணர்தலி னூட லினிது. ௬

ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னுங்
கூடலிற் காணப் படும். ௭

ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலிற் றோன்றிய வுப்பு. ௮

ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப
நீடுக மன்னோ விரா. ௯

ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின். ௰

திருச்சிற்றம்பலம்

சிறப்புப்பாயிரமாகிய

# திருவள்ளுவமாலை

## அசரீரி

திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோ
டுருத்தகு நற்பலகை யொக்க-விருக்க
வுருத்திர சன்ம ரெனவுரைத்து வானி
லொருக்கவோ வென்றதோர் சொல்.

## நாமகள்

நாடா முதனூன் மறைநான் முகனாவிற்
பாடா விடைப்பா ரதம்பகர்ந்தேன்-கூடாரை
யெள்ளிய வென்றி யிலங்கிலைவேன் மாறபின்
வள்ளுவன் வாயதென் வாக்கு. உ

## இறையனார்

என்றும் புலரா தியாணர்நாட் செல்லுகினு
நின்றலர்ந்து தேன்பிலிற்று நீர்மையதாய்க்-குன்றாத
செந்தளிர்க் கற்பகத்தின் றெய்வத் திருமலர்போன்
மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல்.. ௩

## உக்கிரப்பெருவழுதியார்

நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா [நான்முகத்தோன்
றன்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த - நூன் [முறையை
வந்திக்க சென்னிவாய் வாழ்த்துக நன்னெஞ்சஞ்
சிந்திக்க கேட்க செவி. ௫

## கபிலர்

தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட
பனையளவு காட்டும் படித்தான்-மனையள்கு
வள்ளைக் குறங்கும் வளநாட வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பா விரி. ௬

## பரணர்

மாலுங் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியான்
ஞால முழுது நயந்தளந்தான்-வாலறிவின்
வள்ளுவருந் தங்குறள்வெண் பாவடியால் வையத்தா
ருள்ளுவவெல் லாமளந்தா ரோர்ந்து. ௭

## நக்கீரர்

தானே முழுதுணர்ந்து தண்டமிழின் வெண்குறளா
லானு வறமுதலா வந்நான்கு-மேனோருக்
கூழி னுரைத்தாற்கு மொண்ணீர் முகிலுக்கும்
வாழியுல கென்னாற்று மற்று. ௮

## மாமூலனார்

அறம்பொரு ளின்பம்வீ டென்னுமந் நான்கின்
றிறந்தெரிந்து செப்பிய தேவை-மறந்தேயும்
வள்ளுவ னென்பானோர் பேதை யவன்வாய்ச்சொற்
கொள்ளா ரறிவுடை யார். ௮

## கல்லாடர்

ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனி
னன்றென்ப வாறு சமயத்தார்-நன்றென
வெப்பா லவரு மியைபவே வள்ளுவனார்
முப்பான் மொழிந்த மொழி. ௯

## சீத்தலைச்சாத்தனார்

மும்மலையு முந்நாடு முந்நதியு முப்பதியு
மும்முரசு முத்தமிழு முக்கொடியு-மும்மாவுந்
தாமுடைய மன்னர் தடமுடிமேற் றாரன்றோ
பாமுறைதேர் வள்ளுவர்முப் பால். ௰

## மருத்துவன்றாமோதரனார்

சிந்திநீர்க் கண்டந் தெறிசுக்குத் தேனளாய்
மோந்தபின் யார்க்குந் தலைக்குத்தில்-காந்தி
மலைக்குத்து மால்யானை வள்ளுவர்முப் பாலாற்
றலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு. ௧௧

## நாகன்றேவனார்

தாளார் மலர்ப்பொய்கை தாங்குடைவார் தண்ணீரை
வேளா தொழிதல் வியப்பன்று-வாளாதா
மப்பா லொருபாவை யாய்பவோ வள்ளுவனார்
முப்பான் மொழிமூழ்கு வார். கஉ

## அரிசில்கிழார்

பரந்த பொருளெல்லாம் பாரறிய வேறு
தெரிந்து திறநதொறுஞ் சேரச்-சுருங்கிய
சொல்லால் விரித்துப் பொருள்விளங்கச் சொலலுதல
வல்லாரார் வள்ளுவரல் லால். கங

## பொன்முடியார்

கானின்ற தொங்கலாய் காசிபனார் தந்ததுமுன்
கூனின் றளந்த குறளென்ப-நூன்முறையான்
வானின்று மண்ணின் றளந்ததே வள்ளுவனார்
தானின் றளந்த குறள். கச

## கோதமனார்

ஆற்ற லழியுமென் றந்தணர்க ளான்மறையைப்
போற்றியுரைத் தேட்டின் புறத்தெழுதா-ரேட்டெழுதி
வல்லுநரும் வல்லாரும் வள்ளுவனார் முப்பாலைச்
சொல்லிடினு மாற்றல்சோர் வின்று. கரு

## நத்தத்தனார்

ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
பாயிரத்தி னோடு பகர்ந்ததற்பின்-போயொருத்தர்
வாய்க்கேட்க நூலுளவோ மன்னு தமிழ்ப்புலவ
ராய்க்கேட்க வீற்றிருக்க லாம். கசு

## முகையலூர்ச் சிறுகருந்தும்பியார்

உள்ளுத லுள்ளி யுரைத்த லுரைத்ததனைத்
தெள்ளுத லன்றே செயற்பால-வள்ளுவனார்
முப்பாலின் மிக்க மொழியுண் டெனப்பகர்வா
ரெப்பா வலரினு மில். கஎ

## ஆசிரியர் நல்லந்துவனார்

சாற்றிய பல்கலையுந் தப்பா வருமறையும்
போற்றி யுரைத்த பொருளெல்லாந்-தோற்றவே
முப்பான் மொழிந்த முதற்பா வலரொப்பா
ரெப்பா வலரினு மில். கஅ

## கீரந்தையார்

தப்பா முதற்பாவாற் றமாண்ட பாடலினான்
முப்பாலி னாற்பான் மொழிந்தவ-ரெப்பாலும்
வைவைத்த கூர்வேல் வழுதி மனமகிழத்
தெய்வத் திருவள் ளுவர். கக

## சிறுமேதாவியார்

வீடொன்று பாயிர நான்கு விளங்கற
நாடிய முப்பத்து மூன்றொன் றூழ்-கூடுபொரு
ளெள்ளி லெழுப திருபதிற் றைந்தின்பம்
வள்ளுவர் சொன்ன வகை. உ௰

## நல்கூர்வேள்வியார்

உப்பக்க நோக்கி யுபகேசி தோண்மணந்தா
னுத்தர மாமதுரைக் கச்சென்ப-விப்பக்க
மாதானு பங்கி மறுவில் புலச்செந்நாப்
போதார் புனற்கூடற் கச்சு. உக

## தொடித்தலைவிழுத்தண்டினார்

அறநான் கறிபொரு ளேழொன்று காமத்
திறமூன் றெனப்பகுதி செய்து-பெறலரிய
நாலு மொழிந்தபெரு நாவலரே நன்குணர்வார்
போலு மொழிந்த பொருள். உஉ

## வெள்ளிவீதியார்

செய்யா மொழிக்குந் திருவள் ளுவர்மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே-செய்யா
வதற்குரிய ரந்தணரே யாராயி னேனை
யிதற்குரிய ரல்லாதா ரில். உங

## மாங்குடிமருதனார்

ஓதற் கெளிதா யுணர்தற் கரிதாகி
வேதப் பொருளாய் மிகவிளங்கித்-தீதற்றோ
ருள்ளுதொ றுள்ளுதொ றுள்ள முருக்குமே
வள்ளுவர் வாய்மொழி மாண்பு. உ௪

## எறிச்சலூர் மலாடனார்

பாயிர நான்கில் லறமிருபான் பன்மூன்றே
தூய துறவறமொன் றூழாக-வாய
வறத்துப்பா னல்வகையா வாய்ந்துரைத்தார் நூலின்
றிறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து. உ௫

## போக்கியார்

அரசிய லவையைந் தமைச்சிய லீரைந்
துருவல் லரணிரண்டொன் றொண்கூ-ழிருவிய
திண்படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன்
றெண்பொரு ளேழா மிவை. உ௬

## மோசிகீரனார்

ஆண்பாலே ழாறிரண்டு பெண்பா லடுத்தன்பு
பூண்பா லிருபாலோ ராறாக-மாண்பாய
காமத்தின் பக்கமொரு மூன்றாகக் கட்டுரைத்தார்
நாமத்தின் வள்ளுவனார் நன்கு. உ௭

## காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்

ஐயாறு நூறு மதிகார மூன்றுமா
மெய்யாய வேதப் பொருள்விளங்கப்-பொய்யாது
தந்தா னுலகிற்குத் தான்வள் ளுவனாகி
யந்தா மரைமே லயன். உஅ

## மதுரைத் தமிழ்நாகனார்

எல்லாப் பொருளு மிதன்பா லுளவிதன்பா
லில்லாத வெப்பொருளு மில்லையாற்-சொல்லாற்
பரந்தபா வாலென் பயன்வள் ளுவனார்
சுரந்தபா வையத் துணை. உகூ

## பாரதம்பாடிய பெருந்தேவனார்

எப்பொருளும் யாரு மியல்பி னறிவுறச்
செப்பிய வள்ளுவர்தாஞ் செப்பவரு-முப்பாற்குப்
பாரதஞ்சீ ராம கதைமனுப் பண்டைமறை
நேர்வனமற் றில்லை நிகர். ௩0

## உருத்திரசன்மகண்ணர்

மணற்கிளைக்க நீறூறு மைந்தர்கள் வாய்வைத்
துணச்சுரக்குந் தாய்முலை யொண்பால்-பிணக்கிலா
வாய்மொழி வள்ளுவர் முப்பான் மதிப்புலவோர்க்
காய்தொறு மூறு மறிவு. ௩க

## பெருஞ்சித்திரனார்

தமி
எ[illegible]ல் வள்ளுவ ரின்குறள்வெண் பாவினு
லோதிய வொண்பொரு ளெல்லா-முரைத்ததனாற்
றூதவிழ் தார்மாற தாமே தமைப்பயந்த
வேதமே மேதக் கன. ௫௨

## நரிவெரூஉத்தலையார்

இன்பம் பொருளறம் வீடென்னு மிந்நான்கு
முன்பறியச் சொன்ன முதுமொழிநூன-மனபண்டகட்
குள்ள வரிதென் றவைவள் ளுவருலகங்
கொள்ள மொழிந்தார் குறள். ௫௩

## மதுரைத்தமிழாசிரியர் செங்குன்றூர்கிழார்

புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேற்
சிலவர் புலவரெனச் செப்ப-லிலவு
பிறங்கொளிமா லைக்கும் பெயர்மாலை மற்றுங்
கறங்கிருண்மா லைக்கும் பெயர். ௫௪

## மதுரையறுவைவாணிகன் இளவேட்டனார்

இன்பமுந் துன்பமுமென்னு மிவையிரண்டு
மன்பதைக் கெல்லா மனமகிழ-வன்பொழியா
துள்ளி யுணர வுரைத்தாரே யோதுசீர்
வள்ளுவர் வாயுறை வாழ்த்து. ௫௫

## கவிசாகரப் பெருந்தேவனார்

பூவிற்குத் தாமரையே பொன்னுக்குச் சாம்பூநத
மாவிற் கருமுனியா யானைக்-கமரரும்ப
ரேவிற் றிருமா லெனச்சிறந்த தென்பவே
பாவிற்கு வள்ளுவர்வெண் பா. ௧௬

## மதுரைப் பெருமருதனார்

அறமுப்பத் தெட்டுப் பொருளெழுப தின்பத்
திறமிருபத் தைந்தாற் றெளிய-முறைமையால்
வேத விழுப்பொருளை வெண்குறளால் வள்ளுவனா
ரோதவழுக் கற்ற துலகு. ௧௭

## கோவூர்கிழார்

அறமுத னான்கு மகலிடத்தோ ரெல்லாந்
திறமுறத் தேர்ந்து தெளியக்-குறள்வெண்பாப்
பன்னிய வள்ளுவனார் பான்முறைநே ரொவ்வாதே
முன்னை முதுவோர் மொழி. ௧௮

## உறையூர் முதுகூற்றனார்

தேவிற் சிறந்த திருவள் ளுவர்குறள்வெண்
பாவிற் சிறந்திடும்பால் பகரார்-நாவிற்
குயலில்லை சொற்சுவை யோர்வில்லை மற்றுஞ்
செயலில்லை யென்னுந் திரு. ௧௯

## இழிகட்பெருங்கண்ணனார்

இம்மை மறுமை யிரண்டு மெழுமைக்குஞ்
செம்மை நெறியிற் றெளிவுபெற-மும்மையின்
வீடவற்றி னன்கின் விதிவழுங்க வள்ளுவனார்
பாடின ரின்குறள்வெண் பா. சூ௰

## செயிர்க்காவிரியார்மகனார் சாத்தனார்

ஆவனவு மாகா தனவு மறிவுடையார்
யாவரும் வல்லா ரெடுத்தியம்பத்-தேவர்
திருவள் ளுவர்தாமுஞ் செப்பியவே செய்வார்
பொருவி லொழுக்கம்பூண் டார். சூக

## செயலூர்க் கொடுஞ்செங்கண்ணனார்

வேதப் பொருளை விரகால் விரித்துலகோ
ரோதத் தமிழா லுரைசெய்தா-ராதலா
லுள்ளுந ருள்ளும் பொருளெல்லா முண்டென்ப
வள்ளுவர் வாய்மொழி மாட்டு. சூஉ

## வண்ணக்கஞ் சாத்தனார்

ஆரியமுஞ் செந்தமிழு மாராய்ந் ததனினிது
சீரிய தென்றொன்றைச் செப்பரிதா-லாரியம்
வேத முடைத்து தமிழ்திரு வள்ளுவனா
ரோது குறட்பா வுடைத்து. சூங

